# வரலாறு படைத்த

# மிஃராஜ்




<u>வெளியீடு :</u>

**தாருல் இல்ம் இஸ்லாமிக் சென்டர்**

**இராஜபாளையம்.**

# நூலின் உள்ளே

# வரலாறு படைத்த மிஃராஜ்

## ஏன் இந்த சிற்றேடு?

எல்லாப் புகழும் அல்லாஹ் ஒருவனுக்கே! அவன் அருளும் சாந்தியும் இறுதித் தூதர் முஹம்மது (ஸல்) அவர்கள் மீதும், அன்னாரது பாசமிக்க குடும்பத்தார்கள், தோழர்கள், தோழியர்கள் மீதும் இன்னும் எல்லா முஃமினான முஸ்லிமான ஆண்கள், பெண்கள் அனைவர் மீதும் உண்டாகட்டுமாக!

அன்பிற்குரியவர்களே! புனிதமிக்க இந்த ரஜப் மாதத்திலே உங்களை வந்தடைந்திருக்கிறது இந்த சிற்றேடு. இதன் நோக்கம், நமது உயிரிலும் மேலான நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு அல்லாஹ் தனது அத்தாட்சிகளை காண்பிப்பதற்காக ஏற்படுத்திய வரலாற்று சிறப்புமிக்க மிஃராஜ் (விண்ணுலகப்பயணம்) பற்றிய ஆதாரப்பூர்வமான வரலாற்றை சொல்வதற்குத்தான்.

மேலும் மிஃராஜ் சம்பவத்திலிருந்து நாம் பெறக்கூடிய படிப்பினைகளையும், மிஃராஜ் தொடர்பாக இட்டுக்கட்டப்பட்ட பலஹீனமான ஆதாரங்களின் அடிப்படையில் மக்களிடையே காணப்படும் சில தவறான நம்பிக்கைகளையும் மக்களுக்கு தெளிவுபடுத்தி அதை களைவதும் தான் இச்சிற்றேட்டின் நோக்கம்.

நாம் இருக்கக்கூடிய புனிதமிக்க இந்த ரஜப் மாதம் பிறை 27 ல்தான் மிஃராஜ் பயணம் நடைபெற்றது என நினைத்து அந்த நாளில் எல்லா ஊர்களிலும் பெரும்பாலான பள்ளிகளில் சிறப்பு வணக்க வழிபாடுகள் நடைபெற்று வருவதை வருடாவருடம் நாம் பார்த்து வருகிறோம். உண்மையில் இந்த மிஃராஜ் இரவைக் குறித்து அல்லாஹ்வும் அவனது தூதரும் அன்னாரது தோழர்களும் நேர்வழி நடந்த மார்க்கத்தின் முன்னோடிகளான இமாம்களும் நமக்கு என்னதான் வழிகாட்டினார்கள் என்பதை குறித்தும் இச்சிற்றேட்டில் சுருக்கமாக தெரிந்து கொள்ள இருக்கிறோம். இன்ஷா அல்லாஹ்!!!

அல்லாஹ் நம் அனைவருக்கும் அவனை உண்மையான முறையில் பயந்து அவனுடைய மார்க்கத்தை சரியான முறையில் கற்று அமல் செய்யக்கூடிய பாக்கியத்தினை தந்து மார்க்கத்தில் நேர்வழி நடப்பதற்கு அருள்புரிவானாக!

## மிஃராஜ் இரவு வரலாற்றுச் சுருக்கம்

மிஃராஜ் என்பது நபி (ஸல்) அவர்களின் நபித்துவ வாழ்வில் நடந்த மிகப் பெரிய அற்புதமாகும். வேறு எந்த நபிக்கும் வழங்கப்படாத மாபெரும் அற்புதமாக இந்த விண்ணுலகப் பயணம் அமைந்துள்ளது. இந்தப் பயணம் அதில் உள்ள சம்பவங்கள் எல்லாம் ஒரே இரவில் நடந்தது என்பது உண்மையில் அற்புதம் தானே!

நபி (ஸல்) அவர்கள் கஃபாவுக்கு அருகாமையில் பாதி விழிப்பிலும் பாதி தூக்கத்திலும் இருந்த நிலையில் ஜிப்ரீல் (அலை) அவர்கள் இரண்டு மலக்குமார்களுடன் வந்து நபி (ஸல்) அவர்களை ஜம்ஜம் நீருக்கு பக்கத்தில் அழைத்துச் சென்று அவர்கள் நெஞ்சைப் பிளந்து இதயத்தை வெளியில் எடுத்து ஸம்ஸம் நீரால் கழுவி ஈமான் என்ற நம்பிக்கையாலும், அறிவு என்ற நுண்ணறிவாலும் நிரப்பி, மீண்டும் நெஞ்சில் வைத்து தடவினார்கள்.

புராக் என்னும் மின்னல் வேக வாகனத்தில் நபி (ஸல்) அவர்களை கஃபாவிலிருந்து ஜெரூசலத்திலுள்ள மஸ்ஜிதுல் அக்ஸாவுக்கு ஜிப்ரீல் (அலை) அழைத்துச் சென்றார்கள். அங்கு நபி (ஸல்) அவர்கள் நபிமார்கள் அனைவருக்கும் இமாமாக நின்று தொழுகை நடத்தினார்கள்.

இப்பயணத்தைப் பற்றி அல்லாஹ் அல்குர்ஆனில் இவ்வாறு கூறுகிறான்.

**தனது அடியாரை மஸ்ஜிதுல் ஹராமிலிருந்து, மஸ்ஜிதுல் அக்ஸா வரை பயணம் செய்வித்த அல்லாஹ் தூய்மையானவன். அது எத்தகைய இடம் என்றால், அதனைச் சுற்றிலும் பரகத்தை ஏற்படுத்தியுள்ளோம். மேலும் நமது அத்தாட்சிகளை காட்டுவதற்காக (அவரை அழைத்துச் சென்றோம்) அல்லாஹ் செவியேற்கக் கூடியவனாகவும், பார்க்கக் கூடியவனாகவும் இருக்கிறான்.**

**( சூரா பனீ இஸ்ராயீல் 17 : 1 )**

பிறகு ஜிப்ரீல் (அலை) அவர்களுடன் விண்ணை நோக்கி பயணமானார்கள். ஒவ்வொரு வானத்தை கடக்கும்போதும் ஆதம் (அலை), ஈஸா (அலை), இத்ரீஸ் (அலை), ஹாருன் (அலை), மூஸா (அலை), இப்ராஹிம் (அலை) போன்ற நபிமார்களை சந்தித்தார்கள். அனைத்து இறைத்தூதர்களும் முஹம்மது (ஸல்) அவர்களின் நபித்துவத்தை ஏற்றுக்கொண்டார்கள்.

பிறகு அங்கிருந்து மலக்குமார்களால் அல்லாஹ்வை வணங்குவதற்காக அமைக்கப்பட்ட பைத்துல் மஃமூருக்கு அழைத்துச் செல்லப்பட்டார்கள். பிறகு, (வான எல்லையில் உள்ள இலந்தை மரமான) சித்ரத்துல் முன்தஹா நபி (ஸல்) அவர்களுக்கு காட்டப்பட்டது.

நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்விடம் அழைத்துச் செல்லப்பட்டார்கள். (சேர்ந்த) இரு வில்களைப் போல் அல்லது அதைவிடச் சமீபமாக அல்லாஹ்வை நெருங்கினார்கள். அல்லாஹ் தனது நபியவர்களுக்கு பல விஷயங்களை அறிவித்துக் கொடுத்தான். மேலும் அந்த இடத்தில் வைத்து நபி (ஸல்) அவர்களுக்கு மூன்று கட்டளைகள் வழங்கப்பட்டன.

**1) ஐவேளைத் தொழுகைகள் வழங்கப்பட்டன**

**2) ஸூரத்துல் பகரா அத்தியாயத்தின் கடைசி மூன்று வசனங்கள்**

**3) அவரது உம்மத்தில் இணை வைக்காத நிலையில் பெரும்பாவங்கள் செய்திருப்பின் அவர்களுக்கு மன்னிப்பு**

என்ற மூன்று கட்டளைகள் வழங்கப்பட்டன.

பிறகு சொர்க்கத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டார்கள். அங்கு முத்தினால் ஆன கோபுரங்கள் காணப்பட்டன. அதன் மண் (மணம் கமழும் ) கஸ்தூரியாக இருந்தது. பிறகு அங்கிருந்து அதற்கு மேல் அழைத்துச் செல்லப்பட்டார்கள். அங்கு எழுதுகோள்களின் சப்தங்களை கேட்டார்கள்.

## நபிகளார் நரகத்தில் கண்ட வேதனைகள்

இன்று உலகில் மனிதர்கள் பெரும் பெரும் பாவங்களைக் கூட சிறிதும் இறையச்சம் இல்லாமல் சாதாரணமாக செய்து வருகிறார்கள். மிஃராஜின் போது நபி (ஸல்) அவர்களுக்கு அல்லாஹ் சில பாவங்களுக்காக மனிதர்கள் நரகில் அனுபவிக்கும் வேதனைகளைக் காட்டினான். இந்த நரக தண்டனைகள் ஒரு மனிதன் எந்த அளவிற்கு பாவங்களை விட்டும் விலகி இருக்க வேண்டும் என்பதை நமக்கு உணர்த்துகிறது. நபியவர்கள் தான் நரகத்தில் கண்ட காட்சிகளை நமக்கு விவரிக்கிறார்கள்.

**அடுத்தவரை பற்றி குறை கூறி புறம் பேசுபவர்களா நீங்கள்? எச்சரிக்கை!!!**

என்னை மிஃராஜ் அழைத்துச் செல்லப்பட்ட போது ஒரு கூட்டத்தின் அருகில் சென்றேன். அவர்களுக்கு ஈயத்திலான நகங்கள் கொடுக்கப்பட்டு தமது முகங்களையும் நெஞ்சுகளையும் கீறிக் கிழித்துக் கொண்டிருந்தார்கள். ஜிப்ரீலே இவர்கள் யார்? எனக் கேட்க **மக்களின் மானங்களைக் கீறிக் கிழித்து குறை கூறி அவர்களது மாமிசங்களைச் சாப்பிட்டவர்கள்** எனப் பதிலளித்தார்கள்.

**அநாதைகளின் சொத்துகளை சாப்பிடுபவர்களா நீங்கள்? எச்சரிக்கை!!!**

**அநாதைகளின் சொத்துகளை அநியாயமாகப் பயன்படுத்திக் கொண்டவர்களைப் பார்த்தார்கள்.** அவர்களுடைய உதடுகள் ஒட்டகங்களின் உதடுகளைப் போன்று இருந்தது. அம்மிக் குழவிகளைப் போன்ற நெருப்புக் கங்குகளை அவர்கள் வாயில் தூக்கி எறியப்படவே அது அவர்களின் பின் வழியே வெளியேறிக் கொண்டிருந்தது.

**எந்த வகையிலாவது வட்டியோடு தொடர்புடையவர்களா நீங்கள்? எச்சரிக்கை!!!**

**வட்டி வாங்கி வந்தவர்களைப் பார்த்தார்கள்.** அவர்கள் வயிறு மிகப் பெரியதாக இருந்ததால் அவர்கள் தங்கள் இடங்களிலிருந்து எந்தப்பக்கமும் திரும்ப சக்தியற்றவர்களாக இருந்தனர். ஃபிர்அவனின் குடும்பத்தாரை நரகத்தில் கொண்டு வரப்படும்போது அவர்கள் இவர்களைக் கடந்து செல்வார்கள். அப்போது அவர்கள் இவர்களை மிதித்தவர்களாகச் செல்வார்கள்.

**மானக்கேடானவற்றை செய்பவர்களா நீங்கள்? எச்சரிக்கை!!!**

**விபச்சாரம் செய்தவர்களைப் பார்த்தார்கள்.** அவர்களுக்கு முன் கொழுத்த நல்ல இறைச்சித் துண்டும் இருந்தது. அதற்கருகில் துர்நாற்றம் வீசும் அருவருப்பான மெலிந்த இறைச்சித் துண்டும் இருந்தது. அவர்கள் நல்ல கொழுத்த இறைச்சித் துண்டை விட்டு விட்டு துர்நாற்றம் வீசும் இறைச்சித் துண்டையே சாப்பிட்டார்கள்.

**கற்பைப் பேணாதவர்களா நீங்கள்? எச்சரிக்கை!!!**

பிற ஆண்கள் மூலம் குழந்தை பெற்றுக் கொண்டு, அதை தங்கள் கணவன் மூலம் பெற்ற குழந்தை என்று கூறும் பெண்களையும் பார்த்தார்கள். இத்தகைய பெண்கள் மார்பகங்கள் கட்டப்பட்டு அதில் அவர்கள் தொங்கிக் கொண்டிருந்தார்கள். மனிதர்களால் கொஞ்சம்கூட கற்பனை செய்து பார்க்க முடியாத இந்த கொடூரமான வேதனைகளை பெற்றுத் தரும் பாவங்களை விட்டும் அல்லாஹ் நம் அனைவரையும் பாதுகாப்பானாக!

## மிஃராஜ் கற்றுத் தரும் பாடங்கள் :

**உண்மைப்படுத்துவதுதான் ஈமான் ...! சந்தேகம் கொள்வது குஃபர்...!**

மிஃராஜ் சம்பவம் நமக்கு ஒரு முக்கியமான ஈமானிய பாடத்தை சொல்லித் தருகிறது. நபி (ஸல்) அவர்கள் மிஃராஜ் சென்று வந்த பிறகு அதை நபி (ஸல்) தங்கள் கூட்டத்தாரிடம் (மிஃராஜ் பயணத்தில்) அல்லாஹ் தனக்கு காண்பித்த மாபெரும் அத்தாட்சிகளை அறிவித்தார்கள். இதைக்கேட்ட அம்மக்கள் முன்பை விட அதிகமாக நபி (ஸல்) அவர்களுக்கு நோவினையும் தொந்தரவையும் கொடுத்து அவர்களை "**பெரும் பொய்யர்**" என்று வர்ணித்தார்கள்.

ஈமானில் பலஹீனமாக இருந்த சிலருக்கு மார்க்கத்தில் சந்தேகம் வந்துவிட்டது. மக்களெல்லாம் மிஃராஜ் சம்பவத்தை பொய்யென்று மறுத்தனர். ஆனால் அபூபக்கர் (ரழி) அவர்களோ இதைச்சொன்னவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்ற ஒரே காரணத்திற்காக அதை **உண்மையென்றும், சத்தியமென்றும்** ஏற்று நபியை உண்மைப்படுத்தினார்கள். அன்றிலிருந்து அவர்கள் "ஸித்தீக்" ( வாய்மையாளர் ) என்று அழைக்கப்பட்டார்கள்.

இம்மார்க்க விஷயத்தில் நபியவர்கள் ஒரு செய்தியை சொல்லிவிட்டால் அதை அபூபக்கர் ஸித்தீக் (ரழி) அவர்கள் எப்படி உண்மையென்று உறுதியாக நம்பி நபியை உண்மைப்படுத்தினார்களோ அது போன்றே எல்லா முஃமின்களும் நபியவர்களிடமிருந்து நமக்கு கிடைத்த ஒவ்வொரு செய்தியையும் உண்மைப்படுத்த வேண்டும்.

மாறாக ஈமான் கொள்வதை விட்டுவிட்டு இது எப்படி நடைமுறைக்கு சாத்தியம்? இந்த காலத்திற்கு பொருந்துமா? இதை நிரூபித்தக் காட்ட முடியுமா? இதை எப்படி காஃபிர்கள் ஏற்றுக் கொள்வார்கள்? இது அறிவியலுக்கும், ஆய்வுக்கும் ஒத்து வருமா? என்று காஃபிர்கள் கேள்வி எழுப்பி நிராகரித்ததைப் போன்று நபியிடம் கிடைத்த எந்த ஒரு செய்தியையும் நாம் நிராகரித்து விடக்கூடாது. இது நாம் மிஃராஜிலிருந்து பெறும் மிக முக்கியமான ஈமானியப் பாடம்.

## தொழுகையைப் பேணுவதே வெற்றி...! தொழுகையை விடுவது குஃபர்...!

மிஃராஜ் உணர்த்தும் அடுத்த பாடம் கடமையாக்கப்பட்ட ஐவேளைத் தொழுகையின் முக்கியத்துவம். நபியவர்களுக்கு எத்தனையோ மார்க்கக் கடமைகளைக் குறித்து இறைச்செய்தியை இப்பூமிக்கு இறக்கி கடமையாக்கிய அல்லாஹ் இந்த ஐவேளைத் தொழுகையை மட்டும் ஏழு வானங்களுக்கு மேல் நபியை அழைத்துச் சென்று தொழுகையை கடமையாக்கினான் என்றால் இந்த தொழுகையின் மகத்துவத்தையும் அதன் முக்கியத்துவத்தையும் நம் முஸ்லிம் சமூகம் உணர வேண்டும்.

அதுவும் 50 நேரத் தொழுகையை 5 நேரத் தொழுகையாகக் குறைத்து இலகுவாக்கி எவர் ஐந்து நேரத் தொழுகையை சரியாகத் தொழுகிறாரோ அவர் ஐம்பது நேரத் தொழுகையை தொழுததிற்கான கூலி உண்டு என்று நபி (ஸல்) சிறப்பித்து சொன்ன பிறகும் அந்தத் தொழுகையை விடுவதும் அதில் அலட்சியமாக இருப்பதும் எவ்வளவு பெரிய பாவம் என்பதையும் நாம் உணர வேண்டும்.

நபியவர்கள் நோய்வாய்ப்பட்டு மரணத் தருவாயில் இருந்த நிலையிலும் இரு நபித் தோழர்களின் தோள்களில் கைகளைப் போட்டு கால்கள் தரையில் இழுபட பள்ளிக்கு சென்று தொழுகையை நிறைவேற்றிய வரலாறு நமக்குத் தெரியும்.

கத்தியால் குத்தப்பட்டு குடல்களெல்லாம் சரிந்து உயிருக்கு போராடிக்கொண்டிருந்த நிலையிலும் ஃபஜ்ரு தொழுகையை நிறைவேற்றிவிட்டு தொழுகையை விடுபவனுக்கும் இஸ்லாத்திற்கும் எந்த சம்பந்தமும் இல்லை என்று கூறிய உமர் (ரழி) வரலாறும் நாம் அறிந்ததே!

இதையெல்லாம் அறிந்த பிறகும் உலகின் அற்ப காரணங்களை சாக்கு போக்காக சொல்லி தொழுகையை விடக்கூடிய முஸ்லிம்கள் மறுமையில் என்ன காரணங்களை அல்லாஹ்விடம் கூறி தப்பிக்க முடியும்? மறுமையின் முதல் விசாரணையே தொழுகையைப் பற்றித்தானே? அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ள வேண்டாமா?

அன்பர்களே! தொழுகையின்றி வீணாக கழிந்த காலங்களுக்காக அல்லாஹ்விடம் மன்னிப்புத் தேடுவோம். இனிவரும் காலங்களில் ஐவேளைத் தொழுகையை முறையாகப் பேணுவோம்.

- இந்த மிஃராஜ் சம்பவம் அல்லாஹ்வுடைய சர்வ வல்லமையையும், அவன் தான் நாடியதைச் செய்யும் ஆற்றல் உடையவன் என்பதையும் நமக்கு உணர்த்துகிறது.

- நபியவர்களுக்கு காட்டப்பட்ட மகத்தான பேரின்பங்கள் நிறைந்த சொர்க்கம் முழுக்க முழுக்க உண்மை. அந்த சொர்க்கம் இறை நம்பிக்கை கொண்டு பாவங்களிலிருந்து விலகி நல்ல அமல்கள் செய்பவர்களுக்குத்தான் என்று ஆணித்தரமாக அல்லாஹ் குர்ஆன் நெடுகிலும் பேசுகிறான். அதை அடைவதற்காக முழு முயற்சியோடு நாம் துன்யாவிலே செயல்பட வேண்டும்.

- அதே போன்று நபியவர்கள் கண்ட நரக வேதனைகளெல்லாமே முழுக்க முழுக்க உண்மை. அதை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாவல் கோர வேண்டும். இன்னும் நமக்கு மரணம் வரும் வரை சிறு பெரும் பாவங்களிலிருந்து நம்மை தற்காத்துக்கொள்ள போராடிக் கொண்டேதான் இருக்க வேண்டும். அதற்கு அல்லாஹ்வுடைய உதவியையும் நாம் அதிகமதிகம் கேட்க வேண்டும்.

## மிஃராஜ் இரவு பற்றிய தவறான நம்பிக்கைகள் :

### 1. ரஜப் பிறை27 ல் தான் மிஃராஜ் நடந்ததா?

மிஃராஜ் என்ற சம்பவம் ஒவ்வொரு முஸ்லிமும் கட்டாயம் நம்ப வேண்டிய அல்லாஹ்வின் வல்லமையை அடிப்படையாகக் கொண்ட உண்மையான ஒரு நிகழ்வு. ஆனால் அது எப்போது நடந்தது என்ற மாதமோ, பிறையோ ஹதீஸ்களில் எங்கும் உறுதியாகக் குறிப்பிடப்படவில்லை. தோராயமாக யூகமாக சொல்லப்பட்ட ஆதாரங்களைத் தவிர. அது இந்த நாளில்தான் நடந்தது என்று குறிப்பிட்டு சொல்லக் கூடிய சரியான ஆதாரம் எதுவும் கிடைக்காததால் மார்க்க அறிஞர்களிடம் கருத்து வேறுபாடுகள் நிலவுகின்றன.

ஜாபிர் (ரலி), இப்னு அப்பாஸ் (ரலி) ஆகிய இரு நபித்தோழர்களும் ரபீயுல் அவ்வல் பிறை 12 ல் மிஃராஜ் நடந்ததாக கூறுகிறார்கள். இதே கருத்தை இமாம் ஜுஹ்ரியும், இமாம் உர்வா அவர்களும் அறிவிக்கிறார்கள். (பைஹகீ)

துல்கஃதா மாதத்தில்தான் மிஃராஜ் நடந்தது என்று இஸ்மாயில் ஸஅதீ அவர்கள் அவர்கள் அறிவிக்கிறார்கள். (ஹாகிம்)

ஹாபிஸ் அப்துல் கனி அவர்கள் பலவீனமான ஆதாரக் குறிப்போடு ரஜப் 27 ல் நடந்தது என்கிறார்.

ரஜப் மாதம் முதல் ஜும்ஆவின் இரவில் நடைபெற்றது என்று வேறு சிலரும் குறிபபிடுகிறார்கள்.

இவை அல்லாமல் மிஃராஜ் சம்பவம் முஹர்ரம் மாதத்தில் நடைபெற்றது என்றும், ஹிஜ்ராவிற்கு ஓர் ஆண்டுக்கு முன் அதாவது நபித்துவத்தின் பதிமூன்றாம் ஆண்டு ரபியுல் அவ்வல் மாதம் நடைபெற்றது என்றும் சில கருத்துக்கள் உள்ளன.

ஆனால் இந்த செய்திகள் எதற்குமே எந்த அடிப்படையும் கிடையாது என்று இமாம் இப்னு கஸீர் (ரஹ்) அவர்கள் அல்பிதாயா வந்நிஹாயா என்ற தனது நூலில் குறிப்பிடுகிறார்கள். ஆக இது நடந்த நாளைப்பற்றி ஒவ்வொருவரின் அனுமானம் மட்டுமே நமக்கு கிடைக்கிறதே தவிர மிஃராஜ் இரவு இந்த நாளில்தான் நடைபெற்றது என்று குறிப்பிட்டு யாராலும் உறுதியாக சொல்ல முடியாது.

## நபியவர்கள் அல்லாஹ்வை நேரடியாகப் பார்த்தார்களா?

பரவலாக சில முஸ்லிம்கள் மிஃராஜ் பயணத்தின்போது நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வை நேரடியாக பார்த்ததாக நம்புகிறார்கள். இது முற்றிலும் தவறான நம்பிக்கையாகும்.

அல்லாஹ் கூறுகிறான் : பார்வைகளால் அவனைப் பார்த்திட முடியாது. அவனோ எல்லா பார்வைகளையும் அறிந்து கொள்கின்றான். அவன் நுட்பமானவனும் யாவற்றையும் அறிந்தவனுமாக இருக்கிறான். (அல்குர்ஆன் 6:103)

அபூதர் (ரழி) அவர்கள் கூறியதாவது :

நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ‘‘நீங்கள் உங்கள் இறைவனைப்

**பார்த்தீர்களா?'' என்று கேட்டேன். அதற்கு அவர்கள் "(அவனைச் சுற்றிலும் இருப்பது) ஒளியாயிற்றே! நான் எப்படி அவனைப் பார்க்க முடியும்? என்று (திருப்பிக்) கேட்டார்கள்.**

**(நூல்: முஸ்லிம் 291)**

**ஆயிஷா(ரழி) அறிவித்தார்கள்: முஹம்மத்(ஸல்) அவர்கள் தம் இறைவனை (நேரில்) பார்த்தார்கள் என்று கூறுபவன் பெரிய தவறு புரிந்துவிட்டான்: எனினும், அவர்கள் ஜிப்ரீல் (அலை) அவர்களை, அவர்களின் (அசல்) உருவிலும் (அசல் படைப்பின்) அமைப்பிலும் வான விளிம்பு முழுவதையும் அடைத்தபடி (தோற்றமளிக்கக்) கண்டார்கள்.**

**(நூல்: புகாரி 3234)**

மேற்சொல்லப்பட்ட செய்தியில் ஆயிஷா (ரழி) அவர்கள் யாரெல்லாம் நபியவர்கள் மிஃராஜில் அல்லாஹ்வை நேரடியாகப் பார்த்தார்கள் என்று சொல்கிறார்களோ அவர்கள் அனைவரின் கூற்றையும் தெளிவாக மறுக்கிறார்கள். மறுத்ததோடு இல்லாமல் அவ்வாறு நம்புபவர் அல்லாஹ்வின் மீதே இடடுக்கட்டியவராக கருதப்படுவர் என்றும் சுறுகிறார்கள்.

**மிஃராஜ் இரவின் பெயரால் பித்அத்கள்**

ஷைத்தானுடைய மிகப் பெரிய சூழ்ச்சியால் இன்று எல்லா நேரத்திலும் எல்லா இடங்களிலும் மார்க்கத்தில் சொல்லப்படாத பித்அத்கள் மார்க்கத்தின் பெயரால் புகுந்துவிட்டது. அதே போன்று மிஃராஜின் பெயராலும் பித்அத்கள் நம் சமுதாயததில் பரவலாக நடந்தேறி வருகிறது.

மிஃராஜ் சம்பவம் இந்த இரவில்தான் நடந்தது என்று குர்ஆனிலும் ஹதீஸிலும் உறுதியாக சொல்லப்படாமல் இருக்கும்போது ரஜப் பிறை 27ஆம் இரவுதான் மிஃராஜ் இரவு என்று முடிவு செய்து கொண்டு அந்த இரவில் பல புதுமையான வழிமுறைகளை மார்க்கத்தின் பெயரால் முஸ்லிம்கள் நன்மை என நினைத்து செய்து வருகின்றனர்.

**மிஃராஜ் இரவில் வானத்தில் இருந்து ஆயிரக்கணக்கான வானவர்கள் இறங்கி இறையொளியைத் தட்டில் ஏந்தி பூமிக்கு இறங்கி ஒவ்வொரு வீட்டிலும் நுழைந்து இறையோனின் நினைவில் ஈடுபட்டுள்ளவர் மீது இறையொளியைப் பொழிகின்றனர்.** என்று எந்த அடிப்படையும் ஆதாரமும் இல்லாமல் சிலர் எழுதி வைத்துள்ளனர்.

இதை நம்பி மிஃராஜ் இரவை புனிதமாக கருதி பித்அத்தான காரியங்களான சிறப்பு தஸ்பீஹ் நஃபில் தொழுகை, சிறப்பு நோன்புகள், உம்ராக்கள், தர்மங்கள், ராத்திப் திக்ரு, மஜ்லிஸ்கள், மவ்லித் வைபவங்கள் போன்ற காரியங்களை செய்வதை பொதுமக்களுக்கு மத்தியில் பிரபலப்படுத்தி வைத்திருக்கிறார்கள். இதற்கு ஷரீஅத்தில் எந்த அடிப்படை ஆதாரமும் இல்லை.

அந்த இரவில் இவ்வாறு எழுந்து நின்று தொழுதால் தனிச்சிறப்பு உண்டு என்று மக்கள் எண்ணுகின்றனர். எப்பொழுதும் வழமையாக ஒருவர் இரவில் தொழுது வருகிறார் என்றால் அவ்விரவில் தொழுவது தவறல்ல. ஆனால் பிரத்யேகமாக இந்த இரவுக்கு தனிச்சிறப்பு இருக்கின்றது என்று நினைத்து வணங்குவதுதான் தவறு.

### i ) தஸ்பீஹ் நஃபில் தொழுகை :

மிஃராஜ் இரவு அன்று சிறப்பாக 4 ரக்அத் **தஸ்பீஹ் நஃபில்** தொழுகை தொழப்படுகிறது புதிய புதிய முறைகளில் தொழுகையைத் தாங்களாக உருவாக்கி தொழுவதுதான் இதில் வேதனைக்குரிய விஷயம். இதன் தொழுகை முறையாவது ஒவ்வொரு ரக்அத்திலும் 75 முறை **சுப்ஹானல்லாஹி வல்ஹம்துலில்லாஹி வலா இலாஹ இல்லல்லாஹு வல்லாஹு அக்பர்** என்ற திக்ரை தொழுகையின் ( ருகூஉ, ஸுஜூது, சிறு இருப்பு போன்ற ) ஒவ்வொரு நிலையிலும் ஓதி மொத்தம் 300 தடவை இந்த திக்ரை ஓதி தொழுகை நடத்தப்படுகிறது.

இந்தச் சிறப்பு தொழுகைக்கு நபியுடைய வழிமுறையில் எந்த ஆதாரமும் இல்லை என்பதை மக்கள் முதலில் அறிந்து கொள்ள வேண்டும்.

### ii) சிறப்பு நோன்பு :

ஆஷூரா நோன்பு, அரஃபா நோன்பு போன்று ரஜப் பிறை 27ஆம் நாளும் நோன்பு நோற்பது சிறப்புடைய நோன்பு என்று மக்கள் நினைத்து நோன்பு நோற்று வருகிறார்கள். இந்த நோன்பு பற்றி ஓரிரு பலஹீனமான ஹதீஸ் வந்திருக்கிறதே தவிர சரியான அறிவிப்பாளர் தொடர் மூலம் கிடைத்த எந்தவொரு ஸஹீஹான ஹதீஸும் வரவில்லை.

ஹஜ்ரத் உமர் (ரழி) அவர்களின் ஆட்சிக்காலத்தில் சில மக்கள் ரஜப் 27ம் நாள் நோன்பு வைத்தார்கள். மக்கள் ரஜப் 27 க்கு முக்கியத்துவம் கொடுத்து இதை செய்வதாக அறிந்த உமர் (ரழி) அவர்கள் ஒவ்வொருவரிடமும் சென்று நோன்பை முறித்து உண்ணுமாறு வலியுறுத்தினார்கள். நீங்கள் நோன்பு வைக்கவில்லை என்று நிரூபியுங்கள் என்று சொன்னார்கள். அதிக முக்கியத்துவம் கொடுத்து மக்களை சாப்பிட வைத்தார்கள்.

இன்றைய நாள் நோன்பு நோற்பது மிகச் சிறப்பிற்குரியது என்ற எண்ணம் மக்களுக்கு வரக்கூடாது என்ற காரணத்திற்குத்தான் உமர் (ரலி) அவர்கள் இவ்வாறு செய்தார்கள். அவர்கள் ரஜபை ரமலான் மாதத்தோடு ஒப்பிடாதீர்கள் என்று கண்டித்துள்ளார் (தப்ரானி)

iii) **திக்ரு மற்றும் ராதீப் மஜ்லீஸ் :**

மிஃராஜ் இரவில் மக்களெல்லாம் ஒன்றாக அமர்ந்து கூட்டாக சப்தமிட்டு சிறப்பு திக்ரு செய்வதையும் இந்த இரவின் தலைசிறந்த இபாதத்தாக கருதி செய்து வருகிறார்கள்.

அல்லாஹ்வை திக்ரு செய்வதற்கு என்று சில ஒழுங்குமுறைகளையும் வழிமுறைகளையும் அல்லாஹ்வும் அல்லாஹ்வுடைய தூதர் நபி (ஸல்) அவர்களும் கற்றுத் தந்துள்ளார்கள்.

**உரக்க சப்தமின்றி பணிவோடு திக்ரு செய்ய வேண்டும்**

அல்லாஹ் கூறுகிறான்.

**(நபியே!) உங்கள் மனதிற்குள் மிகப் பணிவோடும், உரத்த சப்தமின்றி பயத்தோடும் மெதுவாகவும் காலையிலும், மாலையிலும் உங்கள் இறைவனை நினைவு கூர்ந்து (திக்ரு செய்து) கொண்டிருங்கள்: அவனை மறந்தவர்களில் நீங்கள் ஆகிவிடாதீர்கள் ( அல்குர்ஆன் 7:205)**

**உங்கள் இறைவனை பணிவுடனும் இரகசியமாகவும் பிரார்த்தனை செய்யுங்கள் ( அல்குர்ஆன் 7:55)**

**சப்தமாக திக்ரு செய்வதை நபியவர்களே தடுத்துள்ளார்கள்.**

**அபூ மூஸா அல் அஷ்அரி (ரழி) அவர்களும் ஸஹாபாக்களும் ஒருமுறை நபி (ஸல்) அவர்களோடு சென்று கொண்டிருக்கிறார்கள். அப்போது ஒரு பள்ளத்தாக்கில் ஏறும்போது லாயிலாஹ இல்லல்லாஹ், அல்லாஹு அக்பர் என்று சொல்கிறார்கள் ஒரு கட்டத்தில் அவர்களுடைய இந்த சப்தம் உயருகின்றது அப்போது நபி (ஸல்) அவர்கள் மக்களே! உங்களை கட்டுப்படுத்திக் கொள்ளுங்கள் ( அவசரப்படாதீர்கள். மென்மையாக மெல்லக் கூறுங்கள்.) ஏனெனில் நீங்கள் காது கேட்காதவனையோ இங்கு இல்லாதவனையோ அழைக்கவில்லை. அவன் உங்களுடனேயே இருக்கிறான். அவன் செவியேற்பவன். அருகிலிருப்பவன். ( புகாரி 2992)**

**கூட்டாக அமர்ந்து திக்ரு செய்வதும் தடுக்கப்பட்டதே!**

முதலில் நபியோ நபித்தோழர்களோ கூட்டாக அமர்ந்து திக்ரு செய்ததாக வரலாற்றில் எங்குமே பார்க்க முடியவில்லை. இதுபேன்று கூட்டாக அமர்ந்து திக்ரு செய்யும் வழிமுறை நபி (ஸல்) அவர்கள் மரணத்திற்குப் பின்னால் நபித்தோழர்களின் காலத்தில் ஹவாரிஜ்கள் என்ற வழிகெட்ட கூட்டத்தினரால்தான் முதன்முதலில் உருவாக்கப்பட்டது. இந்த கூட்டத்தினரை ஸஹாபாக்கள் காலத்தில் பள்ளிவாசலை விட்டும் விரட்டியடித்தார்கள் என்பது வரலாறு.

பிரபல நபித்தோழர் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி) அவர்கள் ஒரு பள்ளியில் தொழுகைக்குப் பின் அங்குள்ளவர்கள் வட்டமாக அமர்ந்து சப்தமாக சுப்ஹானல்லாஹ், அல்ஹம்துலில்லாஹ் அல்லாஹு அக்பர், லாயிலாஹ இல்லல்லாஹ் என்று ஒருவர் சொல்ல மற்றவர்கள் அவரை பின்தொடர்ந்து சப்தமாக திக்ரு செய்வதை கேள்விப்பட்டார்கள்.

அந்த பள்ளிக்கு சென்ற இப்னு மஸ்ஊத்(ரழி) அவர்கள் அவர்களின் இச்செயலை கடுமையாக எச்சரித்தார்கள். அவர்களை பள்ளியை விட்டும் வெளியேற்றி விட்டார்கள். (நூல் திர்மிதீ)

இவையெல்லாம் திக்ரு செய்வதில் கவனிக்கப்பட வேண்டிய ஒழுங்கு முறைகளாகும். ஆனால் இன்று மிஃராஜ் இரவு என்ற பெயரில் ராத்திப் திக்ரு மஜ்லிஸ்களில் சப்தமிட்டு கூட்டாக அமர்ந்து திக்ருகள் ஓதப்பட்டு இந்த ஒழுங்குகள் ஒட்டுமொத்தமாக மீறப்படுகின்றன. இன்று பள்ளிவாசல்களில் ஓதப்படுகின்ற ராத்திப் திக்ருகள் வழிகெட்ட சூஃபியாக்களின் வழிமுறைதானே தவிர நேர்வழி நடந்த நல்ல முன்னோர்களின் வழிமுறையே கிடையாது.

(குறிப்பு: சூஃபியாக்கள் என்பவர்கள் அல்லாஹ் எங்கும் நிறைந்திருக்கிறான் எனக்குள்ளும் இருக்கிறான். உனக்குள்ளும் இருக்கிறான். அவனோடு ஒன்றாக கலந்துவிட முடியும் என்ற தவறான வழிகெட்ட சிந்தனை உடையவர்கள் ஆவார்கள்)

**<u>அல்லாஹ்வுடைய பெயரில் தவறிழைக்கும் அர்த்தமற்ற திக்ருகள்</u>**

ராத்திபு திக்ரு மஜ்லிஸ்களில் அல்லாஹ்வோ அவனது தூதர் நபி (ஸல்) அவர்களோ கற்றுத்தராத புதுமையான அர்த்தமற்ற திக்ருகள் ஓதப்படுகின்றன. அதுமட்டுமின்றி அல்லாஹ்வுடைய அழகிய பெயர்களை திரித்துக் கூறும் வரம்பு மீறிய திக்ருகளும் ஓதப்படுகின்றன்.

அல்லாஹ் கூறுகிறான் : **அல்லாஹ்வுக்கு அழகிய பெயர்கள் இருக்கின்றன. ஆகவே, அவற்றைக் கொண்டே நீங்கள் அவனை அழையுங்கள் (அவனிடம் துஆ கேளுங்கள்) அவனுடைய திருப்பெயர்களில் தவறிழைப்பவர்களை நீங்கள் விட்டு விடுங்கள். இவர்கள் தங்கள் செயலுக்கு தக்க கூலியை விரைவில் அடைவார்கள்.**

**( அல்குர்ஆன் 7:180)**

இந்த வசனத்தில் அல்லாஹ் தன்னுடைய பெயர்களில் தவறிழைப்பவர்களை எச்சரிக்கிறான். ஆனால் ராத்திபு மஜ்லிஸ்களில் அல்லாஹ்வுடைய பெயர்களும் நபி (ஸல்) அவர்கள் நமக்கு கற்றுத் தந்த திக்ருகளும் சிதைக்கப்பட்டு ஓதப்படுகின்றன. உதாரணத்திற்கு ராத்திபு மஸ்லிஸ்களில் ஓதப்படுகின்ற சில திக்ருகளைப் பாருங்கள்.

**1) ஹுவ்ஹுவ் என்று 100 முறை ஓதப்படுகின்றன. இதன் அர்த்தம் அவன் அல்லது அது என்பதாகும். ஹுவ்ஹுவ் என்று கூறி யாரை இவர்கள் புகழ்ந்து துதி செய்கிறார்கள். பொருள் முழுமையற்ற இதை 100 முறை ஓதினால் அல்லாஹ்விடம் எப்படி நன்மை கிடைக்கும்?**

**2 ) இல்லல்லாஹ் இல்லல்லாஹ் என்றும் 100 தடவை ஓதப்படுகின்றன.இதன் பொருள் அல்லாஹ்வைத் தவிர என்று முழுமையற்று நிற்கிறது. லாயிலாஹ இல்லல்லாஹ் என்பதனை வெட்டி பாதியை மடடும் ஓதி கலிமா தய்யிபாவை சிதைக்கலாமா?**

இன்னும் ஹக்கு தூ ஹக்கு, ஹுவ் அல்லாஹ் ஹுவ் ஹுவ் அல்லாஹ், ஹய்யுன் கய்யூம் போன்ற திக்ருகளை ராத்திபு மஸ்லிஸ்களில் கூட்டாக ஓதி வருகிறார்கள். இது போன்ற வார்த்தைகளால் திக்ரு செய்வதற்கு மார்க்கத்தில் எந்த அடிப்படையும் இல்லை. இது சூஃபியாக்கள் என்ற வழிகெட்ட பிரிவினரால் உருவாக்கப்பட்ட தவறான வழிமுறை என்பதை நாம் தெளிவாக விளங்கிக் கொள்ள வேண்டும். மார்க்கத்துக்கு புறம்பான இது போன்ற திக்ரு மஜ்லிஸ்களில் கலந்து கொள்ளக் கூடாது.

இவையெல்லாம் அல்லாஹ்வை திக்ரு செய்யும் முறையை கேலிக்கூத்தாக்குவதாகும். அல்லாஹ்வின் கோபத்தையும் அதிருப்தியையும் பெற்றுத் தரும் மாபாதகமான செயல்களாகும். அல்லாஹ் நம் அனைவரையும் இதைவிட்டும் பாதுகாப்பானாக!

## பித்அத்கள் குறித்து எச்சரிக்கை!!!

இவையெல்லாம் நல்ல செயல்கள்தானே! ஏன் தடுக்க வேண்டும்? என்று கேட்பவர்களும் உள்ளனர். எவ்வளவு பெரிய நற்செயலாக இருந்தாலும் அதைப்பற்றி அல்லாஹ்வும் அல்லாஹ்வுடைய தூதர் நபி (ஸல்) அவர்களும் வழிகாட்டவில்லையென்றால் அது புதுமை (பித்அத்) ஆகும். இவை மார்க்கத்தில் நற்செயலாகாது மாறாக அது பாவமாக மாறிவிடும். அல்லாஹ்விடத்தில் அது ஏற்றுக் கொள்ளப்படாது என்பதை நாம் முதலில் புரிந்து கொள்ள வேண்டும்.

இதுபோன்ற மார்க்கத்தின் பெயரால் புதிதாக புகுத்தப்படும் அத்தனை பித்அத்களையும் நபி (ஸல்) அவர்கள் தாங்கள் வாழும் காலத்திலேயே இந்த உம்மத்திற்கு முன்னெச்சரிக்கை செய்திருக்கிறார்கள்.

**யார் நமது மார்க்கத்தில் இல்லாத ஒன்றை அதில் புதிதாக ஏற்படுத்துகிறாரோ அது நிராகரிக்கப்பட வேண்டியதாகும்.**

**நம் கட்டளை இல்லாத ஒரு செயலை ஒருவன் செய்தால் அது நிராகரிக்கப்பட வேண்டும் ( அறிவிப்பாளர்: ஆயிஷா (ரழி) நூல்: புகாரி 2697, முஸ்லிம் 3243 )**

**செய்திகளில் மிகவும் உண்மையானது அல்லாஹ்வுடைய வேதமாகும். நடைமுறையில் (முஹம்மது (ஸல்) அவர்களுடைய நடைமுறையாகும். காரியங்களில் மிகவும் கெட்டது (மார்க்கம் என்ற பெயரில்) புதிதாக உருவாக்கக்கூடியவை அனைத்தும் பித்அத்கள் ஆகும். ஒவ்வொரு பித்அத்தும் வழிகேடாகும்.ஒவ்வொரு வழிகேடும் நரகத்தில் கொண்டு சேர்க்கும்.**

**(அறிவிப்பவர் : ஜாபிர் (ரலி) நூல் : நஸயீ 1560)**

**அல்லாஹ்வுக்கே கற்றுக் கொடுப்பதா?**

**இவையெல்லாம் நற்செயல்தானே ஏன் செய்யக் கூடாது? என்று கேட்பவர்களிடம் அல்லாஹ் ஒரு கேள்வியை கேட்கிறான்.**

**உங்கள் மார்க்கத்தை அல்லாஹ்வுக்கு நீங்கள் கற்றுக்கொடுக்கிறீர்களா?**

**(அல்குர்ஆன் 49:16)**

**அல்லாஹ் சொல்லாத ஒரு விஷயத்தை நாம் மார்க்கம் என்று நினைத்தால் நாம் அல்லாஹ்வுக்கு மார்க்கத்தை கற்றுத் தருவதற்கு சமமாக ஆகி விடும்.**

**லைலத்துல் கத்ர் எனும் இரவு ஆயிரம் மாதங்களை விடச் சிறந்தது என்று அல்லாஹ் தன் திருமறையில் கூறுகிறான். அதுபோல இந்த மிஃராஜ் இரவுக்கும் சிறப்புண்டு என்று கூறியிருக்க வேண்டும். இந்த நாளில் சிறப்புத் தொழுகைகள் தொழுது நோன்பு வைத்தால் அதிக நன்மை உண்டு அன்று அல்லாஹ் கூறியிருக்க வேண்டும்.அல்லது நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்களா என்று பார்க்க வேண்டும்.**

**இவ்விருவரும் கூறவில்லை என்றால் இவர்களுக்கு தெரியாத நல்ல விஷயமா நமக்கு தெரியப்போகின்றது? அல்லது அல்லாஹ்வும் நபி (ஸல்) அவர்களும் நல்ல விஷயத்தை கற்றுக்கொடுப்பதில் குறை வைத்து விட்டார்களா?**

**சான்றோர்களை விடச் சிறந்தவர்களா நாம்!!!**

**இந்த மிஃராஜ் சம்பவம் ஹிஜ்ரத்திற்கு முன்னால் நடந்தது அதற்குப் பின்னால் சுமார் 10 ஆண்டுகள் முழுமையாக அல்லாஹ்வுடைய தூதர் (ஸல்) அவர்கள் உலகில் வாழ்ந்தார்கள்.இந்த 10 ஆண்டுகளில் நபியவர்கள் மிஃராஜ் இரவைப்பற்றி குறிப்பாக கட்டளையிட்டார்கள் என்றோ அல்லது அதைக் கொண்டாட முக்கியத்துவம் கொடுத்தார்கள் என்றோ அல்லது இந்த இரவில் லைலத்துல் கத்ரைப் போன்று விழித்திருந்து அமல் செய்வது அதிக நன்மைக்குரிய காரியம் என்று சொன்னதாகவோ, இவர்கள் செய்ததாகவோ எங்கும் நிரூபணமாகவில்லை.**

**நபி(ஸல்) அவர்கள் மரணித்த பிறகு 100 வருடம் வரை ஸஹாபாக்கள் உலகில் வாழ்ந்தார்கள். இந்த முழு நூற்றாண்டில் எந்த ஆண்டிலும் அவர்கள் மிஃராஜ் இரவை புனிதப்படுத்தி கொண்டாடியதாகவோ, இரவு விழித்திருந்து அமல்**

செய்ததாகவோ நிரூபணமாகவில்லை. ஸஹாபா பெருமக்கள் ரஜப் 27 ல் விஷேசமாக முக்கியத்துவம் கொடுத்தார்கள் என்று வரலாற்றில் எங்குமே காண முடியவில்லை.

ஸஹாபாக்களின் பிரிவிற்குப் பிறகு அடுத்த நூற்றாண்டைச் சேர்ந்த தாபியீன்கள், அவர்களைத் தொடர்ந்து வந்த தபஉத்தாபியீன்கள் என இந்த உம்மத்தின் மிகப்பெரிய சான்றோர்களாகத் திகழ்ந்தவர்கள் யாரும் ரஜப் 27 ல் முக்கியத்துவம் கொடுத்து அமல்கள் செய்தார்கள் என்று வரலாற்றில் காண முடியவில்லை.

எந்த விஷயத்தை நபி(ஸல்) அவர்கள் செய்யவில்லையோ, நபியவர்களால் சான்று பகரப்பட்ட உம்மத்தின் தலை சிறந்த சான்றோர்களான ஸஹாபாக்கள், தாபியீன்கள், தபஉத்தாபியீன்கள், 4 இமாம்கள் என யாரும் செய்யவில்லையோ அதை தீனுடைய ஒரு பகுதியாக நிர்ணயிப்பது அல்லது சுன்னத் என்று சொல்வது அதை சுன்னத்தைப் போன்று புழங்குவது **பித்அத்** ஆகும்.

ரஜப் மாதம் தொடர்பாக ஹதீஸ்கலை வல்லுனரான அல்லாமா **இப்னு ஹஜர் (ரஹ்)** அவர்கள் ஒரு தனி நூலே எழுதியுள்ளார்கள். அதில் ரஜப் மாதத்தின் சிறப்பு பற்றியோ, அதில் குறிப்பிட்ட நாளில் நோன்பு வைப்பது பற்றியோ, குறிப்பிட்ட இரவில் நின்று தொழுவது பற்றியோ எந்த ஒரு ஸஹீஹான ஹதீஸும் வரவில்லை என அந்நூலில் குறிப்பிடுகிறார்கள்.

இதற்கு மேலும் ஒரு மனிதன் இந்த இரவு அதிகம் சிறப்புடையது. இதில் விழித்துஅமல் செய்வது விரும்பத்தக்க சுன்னத் என்று சொல்வானேயாயின் அவன் மறைமுகமாக சொல்ல வருவது **நான் நபியை விட நபித் தோழர்களைவிட மேலும் தாபியீன்கள் தபஉத்தாபியீன்களை விட இந்த மார்க்கத்தை நன்கு அறிந்தவன் என்றும் அவர்களைவிட நான் அதிகம் வணக்க வழிபாடுகளை சிறப்பாக செய்வேன்** என்றும் சொல்ல விரும்புகிறான் என்றுதான் அர்த்தம்.

மிஃராஜ் இரவில் விடிய விடிய விழித்து விழாக் கொண்டாடி விட்டு ஃபஜ்ரு தொழுகைக்கு பள்ளியில் இமாமையும் மோதினாரையும் மட்டும் விட்டு விட்டு செல்லும் ஊர்கள் எத்தனை?

அன்புமிக்க இஸ்லாமியர்களே! மிஃராஜை நம்புங்கள்! அது நமக்கு உணர்த்தும் பாடத்தை படியுங்கள்! இறைவனின் ஆற்றலையும், இறை தூதரின் சிறப்பையும், தொழுகையின் மகத்துவத்தையும் மனதில் இருத்துங்கள். எல்லா பித்அத்தான அமல்களையும் விட்டு விலகி சுன்னத்தில் நிலைத்திருங்கள்.

மிஃராஜ் இரவில் கடமையாக்கப்பட்ட ஐவேளைத் தொழுகையை காலமெல்லாம் பேணித் தொழக்கூடிய மக்களாக நாம் மாறுவோமாக!